# புரட்சிகரமான ஓவியம்

சுயம்பு நிலையம், அல்லிக்கேணி.
ஓவிய விமர்சகர் சுதா சர்மா.

தலைவர், ஓவியர்கள் அகாதெமி,
பாரிஸ்.

அன்பார்ந்த ஐயா,

ஓவியக்கலைக்கும் ஓவிய விமரிசனத்துக்கும் மிகப் பெரிய அதிர்ச்சியைத் தரக்கூடியதும் உலகமே கேட்டறியாத விமரிசன சித்தாந்தப் புரட்சியை உண்டாக்கக் கூடியதுமான ஓர் ஓவியத்தை இத்துடன் அனுப்பியிருக்கிறேன். இதைத் தங்கள் நிர்வாகக் குழுவில் ஆராய்ந்துவிட்டு, வரவிருக்கும் பாரிஸ் ஓவியக் கண்காட்சியில் சேர்த்துக் கொள்ள வேண்டும் என்று கேட்டுக் கொள்கிறேன்.

நான் ஒரு ஓவிய விமரிசகன், நன்றி.

அன்புள்ள சுதா சர்மா

பால் ஸீ சேன்,
தலைவர், ஓவிய அகாதெமி, பாரீஸ்.

அன்புள்ள சுதா சர்மாவுக்கு,

தங்கள் அதிர்ச்சி தரும் கடிதமும் ஓவியமும் வரப் பெற்றேன்.

ஓவியம் யார் தீட்டியது என்று முதலில் அந்தரங்கமாக வேனும் தெரிந்தாக வேண்டும். ஓவியத்தில் கையெழுத்

தைக் காணோம். தாங்களும் சொல்லவில்லை. இதைவிடத் தமாஷ், ஓவியத்துக்குத் தலைப்புக்கூட இல்லை. பதில் கடிதம் எதிர்பார்க்கிறேன். நன்றி.

அன்புள்ள, பால் ஸீ சேன்.

நண்பருக்கு,

தங்களுடைய கடிதம் கிடைத்தது. தங்கள் கோரிக்கைக்கு இணங்கப் பெயரை உடனே குறிப்பிட்டுவிடலாம். ஆனால் அது முழு உண்மையாகாது. ஏனென்றால் திடுக்கிடத்தக்க ஓவியத் தத்துவங்கள் இங்கேதான் வெடித்தெழுகின்றன. ஆகையால்......

ஓவியத்தை ஒருவர் சிருஷ்டி செய்ய வேண்டும் என்று கூறுவது தவறு என்ற புரட்சிகரமான உண்மையை நான் இதிலிருந்துதான் அறிந்தேன். சொல்லப்போனால், தற்காலமென்று கூறும் கால எல்லைக்குப் பிறகு தான்-தனி உரிமை உடைமை என்ற எண்ணங்கள் வேரூன்றிய பிறகு-ஓவியத்தையோ கலையையோ ஒருவன் சிருஷ்டிப்பது என்ற மரபும் இலக்கணமும் தோன்றியிருக்க வேண்டும். ஆதிகால ஓவியங்களைப் பார்த்தால்-அவற்றைத்தானே இப்பொழுது மேல்நாட்டு ஓவியர்கள் ஆதரிசமாகக் கொண்டிருக்கிறார்கள்?- ஒருவர் எழுதியதாகத் தெரியவில்லை. வெகு முக்கிய விஷயங்களெல்லாம் அநாதியாக இருக்கின்றன, மூலம் தெரிவதில்லை என்ற உண்மைகளை யாரும் உணர்வதில்லை. உதாரணமாக, உழுவதை, பயிரிடுவதைக் கண்டு பிடித்தவன் யார்? ரொட்டி சுடுவதைக் கண்டு பிடித்தவன் யார்? யாருக்குத் தெரியும்? ஆகையால் தாங்கள் கோருவது தேவையற்ற தகவல் என்று முதலில் வணக்கமாகக் கூறுகிறேன்.

போகட்டும். புரட்சிகரமான வளர்ச்சியின் மாறுதல்களைக் கலைஞர்களும் விமர்சகர்களுமேனும் கவனிக்கிறார்களா என்றால் அதுவும் இல்லை. விஞ்ஞானயுகத்தின் விளைவு

களை இன்னும் யாரும் பூர்ணமாக உணர்ந்துகொள்ள வில்லை. கணக்குப் போடும் மிஷின்களைப் பாங்கில் பார்த்திருக்கிறேன். மொழிபெயர்ப்புக்கு மிஷின் இருப்பதாகச் செய்தி படித்திருக்கிறேன். ஒரு மிஷின் செய்யுள் இயற்றுவதாகக் கூடப் பத்திரிகைகள் பேசின. இந்த நிலைமையில் ஓவியம் மாத்திரம் தனி மனிதனின் சிருஷ்டியாகத்தான் இருக்க வேண்டும் என்ற சித்தாந்தம் எப்படி நியாயமாகும்?

தாங்கள் ஓவியரின் பெயரைக் கேட்டிருக்கிறீர்கள். அவர் ஓர் அச்சகத்தில் மிஷின் பணியாளர். அவருக்கு ஓவியம் பற்றிச் சுட்டுப் போட்டால்கூடத் தெரியாது. அவர் போய் இந்த ஓவியத்தில் தூரிகையை நாட்டுவது எங்கே? ஓவியத் தூரிகை இருப்பதுகூட அவருக்குத் தெரியுமோ என்னவோ! ஆனால் இந்த ஓவியத்தை யாருடனாவது சம்பந்தப்படுத்தித்தான் ஆகவேண்டும் என்று வற்புறுத்துவதால், அவரைத்தான் உபாதான காரணமாகக் கொள்ள வேண்டும். நான் சொல்வது கிண்டல் என்று தங்களுக்கு நிச்சயம் தோன்றக் கூடுமாதலால், இந்த ஓவியங்கள் உற்பத்தி ஆவதையும் உற்பத்தி செய்பவரையும் நேரில் கண்டு உண்மையை உலகறியச் செய்யவேண்டுமென்று கேட்டுக் கொள்கிறேன்.

இந்த ஓவியத்தை உங்களுக்கு அனுப்பிய பிறகு இதே இடத்திலிருந்து இன்னும் இரண்டு ஓவியங்கள் கிடைத்திருக்கின்றன. அவையும் உங்களுக்கு ஒரு தூண்டிலும் தூண்டுதலும் ஆகும் என்று நம்புகிறேன்.

அன்புள்ள, சுதா சர்மா.

அன்புள்ள சுதா சர்மாவுக்கு,

தங்கள் கடிதத்துக்கு நன்றி. எத்தனையோவித ஏமாற்றங்களை ஓவிய வரலாறு கண்டிருக்கிறது. ஒன்று கூடிவிட்டால் அதனால் மோசம் ஒன்றும் வந்துவிடாது. ஆனால்

தாங்கள் கூறியிருப்பதை ஏமாற்றென்று கருத நான் தயாராக இல்லை. சிந்தனையின் சாதனை அளவுக்கு நடப்பியல் புத்தியால் எழ முடிவதில்லை என்பது அநுபவ உண்மை.

தங்கள் கடிதத்தை அகாதெமி நிர்வாகக் குழுக் கூட்டத்தில் வைப்பதென்று முடிவு செய்து வைத்தேன். அவர்களும் ஒருநாள் முழுவதும் விவாதித்து, நேராக விஷயங்களை அறிந்துகொண்டு அறிக்கை சமர்ப்பிக்கும்படி கட்டளை இட்டிருக்கின்றனர்.

நான் ஆகஸ்டு ஒன்பதாம் தேதி பம்பாய் வருகிறேன். பம்பாயிலிருந்து சென்னைக்கு வந்து அடுத்த நாளே கிளம்பித் தங்களைச் சந்திக்கிறேன்.

—பால் ஸீ சேன்.

## 2

ஆகஸ்டுப் பன்னிரண்டாம் தேதி சுதா சர்மா பால் ஸீ சேனைச் சென்னை நாகரிக ஓட்டல் ஒன்றில் சந்தித்தார். மரியாதை முறையான பேச்சு வார்த்தைகள், பரஸ்பர பூர்வோத்தரங்கள், ஓவிய விமரிசனப் போக்குப் பற்றிய சர்ச்சைகள் ஆகியவை அரை மணி நேரம் நடைபெற்றன.

"நல்லது. நீங்கள் சொன்னவர் இங்கேதானே இருக்கிறார்?"

"ஆமாம்."

"அது ஓர் அதிருஷ்டம். இல்லாவிட்டால் அந்த ஊருக்குப் போகவேண்டி இருந்திருக்கும். நான் அதிக நாள் தங்குவதற்கும் இல்லை. எப்பொழுது பார்க்கலாம்?"

"இப்பொழுதே பார்க்கலாம். நீங்கள் வருகிறீர்கள் என்றுகூட அவருக்கு நான் சொல்லவில்லை. முன்பு கடிதத்

தில் குறிப்பிட்டிருந்தேனே, அந்தப் படங்களையும் ஒரு பார்வை பார்த்துவிடுங்கள். புரட்சிகரமான உண்மையைக் கண்டுபிடித்திருக்கிறேன் என்பது புரியும்.''

பால் ஸீ சேன் அந்த இரு படங்களையும் வாங்கி ஊன்றிப் பார்த்தார். தாம் கிண்டல் என்று ஒரு சமயம் நினைத்தது எவ்வளவு தவறு என்பது போல் முகம் ஒரு தடவை அசடு தட்டிற்று. வெகு பிரயாசையுடன் அதை மூடி மறைத்துக் கொண்டார்.

பின்னர் இருவரும் புறப்பட்டனர். அச்சாபீசை அடைந்து முதலாளியிடம் வெள்ளைக்காரர் அச்சாபீசைப் பார்க்க வந்திருப்பதாகக் கூறியபோது அவர் உண்மை என்றே நினைத்துக் கொண்டார். கலை, அது இது என்றால் அவர் முழம் என்ன விலை என்றுதான் கேட்பார். " இவர் தாம் நான் சொன்னவர் '' என்று சுதா சர்மா மிஷின் ஊழியரைச் சுட்டிக்காட்டியபொழுது துரை வந்தனம் செய்தபோதிலும் வியப்படைய தவறவில்லை. ஆளைப் பார்த்தால் கலைஞனுக்கு வேண்டிய தெளிவோ கூர்மையோ காணோம்.

" ஓவியங்களை எப்பொழுது......?'' என்று ஸீ சேன் கேட்டார்.

சர்மா சிரித்தார்.

" அவர் வேலை செய்யும்பொழுது ஓவியங்கள் தாமாக உண்டாகும். இதோ பாருங்கள் அவர் காலடியில்.''

ஸீ சேன் குனிந்து தொழிலாளரின் காலடியில் இருந்த இரண்டு தாள்களை எடுத்தார். தாள்கள் கசங்கியும் சுருங்கியும் மையாகவும் இருந்தன.

சர்மா, ஸீ சேனை ஒரு மேஜைக்கருகில் உட்கார்த்தி, தாள்களை மேஜையில் சுருக்கமின்றி விரித்துச் சமப்படுத்தினார். பல மடிப்பு விழுந்த இடங்களில் வெள்ளையாகவும்,

சுருக்கங்கள் இருந்த இடத்தில் மசி பட்டும் படாமலும் பல இடங்களில் மசி பரவியும் மொத்தையாகவும் இருந்தது. நடுவில் நடுவில் அடுத்தடுத்துக் கோடுகள் தெரிந்தன. இரண்டு நிமிஷம் பிடித்தன — ஓவியத்தைப் புரிந்துகொள்ள. புரிந்துகொண்ட பிறகு நம்பிக்கையின் எல்லையைக் கடந்து போய்விட்டது போன்ற ஓர் அசட்டுக் கேள்விக் கேட்டார்.

"தொழிலாளர் காலால் ஓவியம் எழுதுவாரோ ?"

சுதா சர்மா ஒரு நிமிஷம் மௌனமாக இருந்துவிட்டுக் கூறினார்

" உண்மையை நம்மால் ஜீரணித்துக்கொள்ள முடியாததால்தான் பழைய நினைப்புகளையும் சித்தாந்தங்களையுமே பிடித்துக்கொண்டு உள் மனம் தொங்குகிறது. அதனால் தான் புரட்சியையும் புதுமையையும் விஞ்ஞானத்தையும் மிரட்டி வருகிறோம். அல்லது கேலி செய்து வருகிறோம்."

" இந்த அதிசயம் எப்படி நிகழ்கின்றதென்று புரியவில்லையே !"

" இது மிகவும் எளிய காரியம். இதில் அறிவோ கற்பனை கலந்த முயற்சியோ எதுவும் இல்லை. மிஷினில் அச்சடிக்க வைக்கப்பட்ட தாள் சரிவர வைக்கப்படாத காரணத்தாலோ எதனாலோ சிக்கிக்கொள்ளும்பொழுது அச்சே சரிவர விழாமல் ஏதோ குழறிப் போகிறது. அந்தத் தாளில் தான் இவை பிறக்கின்றன. இவற்றில் ஓவியம் இருப்பது அச்சாபீஸ்காரருக்குத் தெரியாது."

ஒரு மணி நேரம் கழித்து மிஷின் வேலையாள் எடுத்தெறிந்த புதுத்தாள்களை எடுத்து ஸீ சேன் பார்த்தார். ஆராய்ந்தார். அவை சுருண்டும் மடங்கியும் திட்டுத்திட்டாக மையாகவும் இருந்தன. அவற்றை மேஜைமேல் ஆவலுடன் பிரித்து வைத்துப் பார்த்தார். இப்பொழுது ஓவியத்தைக் காண்பதற்கு நேரம் ஆகவில்லை. அற்புதமான

ஏரியும் பக்கத்தில் தோப்பும் படத்தில் தெரிந்தன. மற்றொன்றில் மான்கள் போவது போலிருந்தது. அதற்குப் பிறகு அவர் மனத்தில் சந்தேகமே பிறக்கவில்லை.

"நண்பரே, புரட்சியை நேருக்கு நேரே கண்டுவிட்டேன். ஓவிய உலகம் இந்த அதிர்ச்சியைத் தாங்குமா என்பதைக் கண்காட்சியில் பார்த்துவிடலாம். இன்றிரவே புறப்படுகிறேன்."

"இதோ இப்பொழுது தயாராகி இருக்கும் ஓவியத்தையும் என்னிடத்தில் இருக்கும் இரண்டையும் எடுத்துச் சென்று கண்காட்சியில் சேர்த்து விடுங்கள். தங்களுடைய மெய்யான ஓவியப் பண்புக்கு என் பாராட்டு."

"நான் உங்களுக்குப் பாராட்டு இங்கே தெரிவிக்க மாட்டேன். கண்காட்சிக்கு இந்த மிஷின் தொழிலாளரை அழைத்துக்கொண்டு தவறுமல் வாருங்கள். போனவுடன் பணம் அனுப்புகிறேன்."

"நன்றி" என்ருர் சுதா சர்மா.

இந்தக் கட்டத்தில் முதலாளி வெள்ளைக்காரரிடம் வந்து நன்றி கூறினர். பணம் என்றதும் தமக்கு கிடைக்கட்டுமே என்று நினைத்து, துரை விஜயத்தை ஆயுள் முழுவதும் மறக்கப்போவதில்லை என்று உறுதி கூறினர். ஸீசேன் முதலாளி கையைக் குலுக்கிவிட்டு விடைபெற்றுக் கொண்டார்.

ஒரு மாதத்துக்குப் பிறகு பாரிஸ் கண்காட்சியில் பழைய ஓவியம் எதுவும் இராதென்றும், புரட்சிகரமான புது ஓவியங்களே இருக்கும் என்றும் பாரிஸ் பத்திரிகைகளிலும் ஐரோப்பியப் பத்திரிகைகளிலும் செய்திகள் வெளியானபோது ஓவிய உலகமே திடுக்கிட்டது.

மறு வாரத்தில் மிஷின் தொழிலாளியின் காலடியில் பிறக்கும் ஓவியங்களில் இருபத்தொன்றை ஓவிய ரசிகர்

களும் விமரிசகர்களும் கட்டுக்கடங்காத கூட்டமும் பாரிஸ் அகாதெமிக் கண்காட்சியில் பார்த்தபிறகு பழைய ஓவியர் களின் காலம் முடிந்துவிட்டதென்றும், புரட்சிகரமான புது ஓவியங்களின் காலந்தான் இனி என்றும் அறிந்த பொழுது உலகம் முழுவதும் குழம்பியே போய்விட்டது.

இவற்றை எல்லாம்விடப் பெரிய அதிர்ச்சி இதுதான். ஓவிய நிபுணர்களையும் விமரிசகர்களையும் பாரிஸ் அச்சகங் களுக்கு அழைத்துப்போய், மிஷின் காலடியில் தாமாகப் பிறக்கும் ஓவியங்களையும் ஸீ சேன் காட்டியபொழுது அவர்கள் கண்ணையே நம்பவில்லை. கண்ணை நம்பாமல் இருந்தால் காட்சி பொய்த்து விடுமா?

புதிய ஓவிய யுகம் என்று பத்திரிகைகள் எல்லாம் கொட்டை எழுத்தில் எழுதி நிரப்பின. சுதா சர்மாவுக்குப் பாரிஸ் அகாதெமி பிரமாதப் பாராட்டை அளித்தது.